நூலாசிரியர்
*வளர்தமிழ்ச் செல்வர்,*
*கலைமாமணி*

**மணவை முஸ்தபா**

சென்னை அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களில் பட்டம் பெற்ற வளர்தமிழ்ச் செலவர், கலைமாமணி மணவை முஸ்தபா, சர்வதேசத் தமிழ்த் திங்களிதழான 'யுனெஸ்கோ கூரியர்' ஆசிரியராவார்.

'காலம் தேடும் தமிழ்' 'இன்றையத் தென்னக இலக்கியப் போக்கு,' 'இளைஞர் இஸ்லாமியக கலைக்களஞ்சியம்' உட்பட இருபத்தியாறு தமிழ் நூல்களை எழுதியுள்ளார். ஆங்கிலத்திலிருந்து எட்டு நூல்களையும மலையாளத்திலிருந்து ஏழு நூல்களையும் பெயர்த்துள்ளார். எட்டு தொகுப்பு நூல்களும் வெளிவந்துளளன. ஐந்து சிறுவர் இலக்கியங்களையும் படைத்துள்ளார். முப்பதுக்கு மேற்பட்ட வானொலி நாடகங்களையும், ஐந்து தொலைக்காட்சி நாடகங்களையும எழுதியுள்ளார். எட்டு ஆண்டுகள் திரைப்படத் தணிக்கைக் குழு உறுப்பினராகவும இருந்துள்ளார். சர்வதேச தமிழ் ஆராய்ச்சிப் பேரவையின் இந்தியக் கிளையின் இணைச் செயலாளர்.

இவரது கலை, இலக்கியப் பணியைப் பாராட்டி தமிழ் நாடு அரசின இயல், இசை, நாடக மன்றம் 1986 -இல் கலைமாமணி விருதளித்துப் பாராட்டியது. இவரது அறிவியல் தமிழ்ப பணியைப் போற்றி தமிழ்நாடு அரசு 'திரு வி க.' விருதை 1989இல் வழங்கியது. இவரது உலக ளாவிய தமிழ்ப் பணியைப் பாராட்டி தமிழ்நாடு மாநில கூட்டுறவு வங்கி அதிகாரிகள் மன்றம் 'தமிழ்த் தூதுவர்' பட்டம் தந்து பாராட்டியது. இவரது அயரா தமிழ்ப் பணியைப் பாராட்டி. இளையான்குடி டாக்டர் ஜாகீர் ஹுசைன் கல்லூரி அறிவியல் மன்றம் ''வளர்தமிழ்ச் செல்வர்'' விருதளித்துப் பாராட்டியது. சிந்தனையாளர் பேரவை அறிவியல் தமிழ்ச்சிற்பி பட்டம் வழங்கியது. இவர் மும்முறை உலகை வலம் வந்துள்ளார்